உ

கடவுள் துணை.

# வித்தியாபாநு.

மதுரையில் பிரசுரமாகும்

## ஒரு மாதாந்தத் தமிழ்ப் பத்திரிகை.

தொகுதி ௬. | ஆனந்த வருஷ ஆடி மீ | பகுதி ௪.

## வேடமும் ஒழுக்கமும்.

நம் தமிழ்நாட்டிலிருந்த முன்னோர்களின் சரித்திர உண்மை யறிவதற்குப் போதுமான விஷயங்கள் பலவற்றையும் உள்ளவாறு விளக்கும் நூல்கள் இல்லையெனினும், ஏதேனும் ஒன்றிரண்டு நூல்களைக்கொண்டு ஆராயப்புகினும் அவை பொய்யும் புரட்டும் மலிந்து நிரம்பப் பெற்றனவெனவும் நம்மைப்பற்றிக் குறைகூறுவதுடன், ஆங்கிலேயர் நம்மை ஆளத்தொடங்கிய காலமுதல் சரித்திரங்களை யெழுதுவோர், திறம்பாமல் நேர்வழி நின்றே எழுதிவருகின்றார்களெனவும் பலர் கூறுவர். ஆங்கிலேய அரசாட்சி தொடங்கிய கால முதலாயினும் இக்குறை நம் நாட்டைவிட் டகன்றதெனக் கருதி மகிழ்வார் பலருண்டு. இங்ஙனம் நாம் அற்ப மகிழ்ச்சியைப்பெற்று அதனை மேன்மேல் வளர்க்க அவாக்கொண்டு வரும் இக்காலத்தில் யாராவது ஒருவர் சரித்திரத்தை வெளியிடப்புகும் பத்திரிகைகளாயினும், புத்தகங்களாயினும் உண்மைக்கு விரோதமாகப் பொய்யும் புரட்டுங்கொண்டு வெளிப்படுமாயின் அறிஞர்யார் தாம் கவலாதார்? ஒருவரைப்பற்றிய சரித்திரம் கூறும் நூல்களும் புத்தகங்களும் வெளியிடும் பொய்யும் புரட்டும் இப்போது நேரிலறிவாரை மயக்காமல் அவரால் அருவருத்துத் தள்ளப்படுமாயினும் சிலகாலத்துக்குப்பின்னர் அவைகளிற் கூறப்பட்ட பொய்யும் புரட்டுமே உண்மையாம்போலு மெனப் பலர் மயங்கற்கு ஏதுவாமாகலானும், இக்கா

லத்தும் கேரில் உண்மை புணராதாராய்த் தூரதேசவாசிகளாவா ரை மயக்கிக் கேடுபுரியுமாகலானும் இத்தகைய கேடு தலையெடா வண்ணம் அவ்வப்போதே உண்மையை விளக்கிப் பொய்மைக்கடி ந்து வருதல் அறிஞர் கடமையேயாம். அன்றியும், நம் தமிழ் நா டானது உண்மைத்துறவு பூண்டுள்ள மெய்ஞ்ஞானிகளைத் தெய்வ மாகப் போற்றி வழிபாடியற்றும் பெரும் புண்ணிய முடையது. உண்மைத்துறவிகளாவார் யாவரென்பது எளிதில் அறிந்துகொள் ளத்தக்கதன்று. பெரும்பாலும் உலகத்தார் யாரைத் துறவிகளெ ன்றெண்ணுகின்றார்களெனில் காஷாயவுடை, விபூதிருத்திராக்ஷதா ரணம், சிவ நாமோச்சாரணம், முதலியவற்றைக் கொண்டவர்களைக் கண்டமாத்திரத்தே இவர்களைத் துறவிகளெனக் கருதி வணங்கி அன்பு செலுத்துகின்றார்கள். ஒரு அரச குமாரனைக்கண்ட பிர ஜைகள் அவனை அரசனாகவே நினைத்து அன்பு செலுத்துவதுபோல் காஷாய விபூதிருத்திராக்கதாரணங்களை யுடையாரைக் காணுமிட த்து அவரைச் சிவபெருமானாகவே பாவித்து அன்பு செலுத்த வேண்டுமென்று நமது முன்னோர் நூல்களும் பொதுவாகக் கூறுகி ன்றன.

அநாதியே ஆணவமலத்தால் மறைப்புண்டு பந்தவசத்தராய், எனதென்னும் புறப்பற்றும், யான் என்னும் அகப்பற்றும் உடைய ராய் வாழும் மக்களின் மனத்தைச் செப்பஞ்செய்து பற்று விடுத்து ப்பந்தத்தை உதறி ஆணவத்தை விலக்கி அருட்பெருஞ்சோதியை த்தலைக்கூடப்பெற்று உய்யச்செய்யக் கருதியே நம்முதியோர் "சிவ னடியாரைச் சிவனென நினைக" எனக்கட்டளையிட்டருளுவாராயி னர். உண்மையடியாரைக் கண்டு அன்புபாராட்டவே அவர் நம் மை உய்விக்க நினைந்து அறவழியைப் போதிப்பர். "ஒழுக்க முடை யவர்க் கொல்லாவே தீய, வழுக்கியும் வாயாற் சொலல்" என்பவாக வின் அவர் கூறுவனயாவும் நன்மையாகவே வரும். அவர் கூறியா ங்கே நடப்போமாயின் யாமும் அவரைப்போலவே சிவபெருமான்றி ருவருட்குப் பாத்திரராவோம். பிறப்பிறப்பொழித்துப் பேரின்ப வாழ்வடைவதற் குரியராவோம். ஆதலாற்றான் நம்பெரியார் அவ ரை அவ்வாறு வழிபடுக, என விதித்து வைத்தனர்.

இஃதிங்ஙனமாக, பிறரை வஞ்சித்து மோசஞ்செய்து கெடுக்கும் மகாபாதகர்கள் எக்காலத்து முள்ளார். அப்பாதகருட்சிலர் சிவவேடத்தை யணிந்து, தாம் இப்பொழுதுதான் கயிலாயத்திலிருந்து கீழேயிறங்கி வந்தவரைப்போல வயிற்றுப்பிள்ளையும் நழுவும்படி வாயினிக்கப் பேசி உலகரை மயக்கிப் பெருந்தீங்கு விளைப்பாராயினர். இனி இத்தகைய அதிபாதகர்களை என் செய்வது? இச்சண்டாளர்களால் உலகம் வஞ்சிக்கப்பட்டுக் கெடுகின்றது. இவர் புனைந்துள்ளவேடமோ காஷாயம், உருத்திராக்கம், விபூதியாதி சிவசின்னங்கள். இச்சிவசின்னங்களை யுடையாரை வணங்க வேண்டுவதும் அவர்க்கு உவப்பன செய்தலும் நமது கடமை. இக்கடமையால் சாதுக்கட்குப் பெருந்தீங்கு நேர்வதாகின்றது. இவற்றையறிவாலறிந்த நம்பெரியோர்கள் இக்கொடியவர்களால் சாதுக்கள் கேடுறாமைகருதி அதற்குரிய விதியும் விதிக்கலுற்றார்கள். அவ்விதியாவது:—

ஒருவன் சிவவேடங்களை யணிந்துகொண்டு வேடத்துக்குத்தக்கபடி ஒழுக்கமில்லாம லிருப்பானாயின் அவனைத் தண்டிக்கவேண்டும் முறையில், மறுமையில் நரகதண்டனையை முழுமுதற் கடவுள் புரிவர். இம்மையில் சரீரதண்டனையை அரசன் செய்யவேண்டும். அதாவது ஒழுக்க மற்ற வேடதாரிகளைக் கண்டால் அவரைத் தூணொடு பிணித்தும், நையப்புடைத்தும், கைவிலங்கிட்டும், சிறைக்குட்புகுத்தும் இன்னோரன்ன தண்டனைகளைச் செய்யலாம் என்பதே. இதனை:—

“வேட நெறிநில்லார் வேடம்பூண் டென்பயன்”

“தத்தஞ் சமயத் தகுதிநில் லாதாரை
அத்தன் சிவன்சொன்ன ஆகம நூனெறி
எத்தண்ட முஞ்செயும் அம்மையில் இம்மைக்கே
மெய்த்தண்டஞ் செய்வது வேந்தன் கடனே” (திருமந்திரம்)

என்பனவற்றாற் தெளியலாம். அன்றியும், ஒரு வஞ்சகன் அரச குமாரனைப் போல வேடம் புனைந்து ஜனங்களை ஏமாற்றி வருவானாயின் அவனது வஞ்சனை வெளிப்படுங்காலும் ஜனங்கள் அவனைக் கொண்டாடுவதும், அவன் கள்வன், நம்

அரச குமாரனைப் போல் வேடமிட்டு வந்துள்ளான், என்பதை யறிந்தவுடன் முதலில் சர்வ சனங்களும் அவனை ஏசியும், உதைத்தும், காறியுமிழ்ந்தும், பின்கட்டுக்கட்டியும், மிகக் கொடுந்துயரு றுத்தலும், அவ்வலங்கோலத்துடன் அரசனிடம் கொண்டுபோய் விடப்புழி அரசன் மிகச்சினந்து கடுந்தண்டனை விதித்தலும் பிரத்தி யட்சத்திற் காண்டுமன்றே. அவ்வாறே சிவகுமாரர்களாகக் கரு தப்படும் சிவனடியார்களைப்போல வேடம்புனைந்து உலகை வஞ்சிக் கும் மஹா பாவிகளைக்கண்டால் தக்கவாறு தண்டனைசெய்தல் நமது கடமையென்பது எவர்க்குமொப்ப முடிந்தவொன்றாம். இம்மூன்றா வதை நோக்குங்கால் நாம்கொள்ளவேண்டும் நீதியாவது:—வேடக் காட்சி மட்டுமே நமக்குப் புலப்பட்டுழி வணங்கவேண்டுமென்ப தும், அவ்வேடம் வஞ்சவொழுக்கத்தினதென்பது புலப்பட்டுழி அவ னைக் கொலைவேடரினும் கொடும்பாதகரெனக் கருதி, மற்றும் பலர் இவர் வஞ்சனையால் இடர்ப்படாவாறு காக்கவேண்டி நயப்புடைத் தாத் தண்டித்தல் வேண்டுமென்பதும் ஏற்கும். இந்நியதியைச் சரித்திரமுகத்தானும் அறியலாம். எங்ஙனமெனில் ஏனாதிநாயனா ரின் தாயப்பகைவனாகிய அதிசூரன் சிவவேடத்தால் அந்நாயனா ரைக் கொலைசெய்ததும், மெய்ப்பொருணாயனாரை அவர் பகைவனா கிய முத்திநாதன் சிவவேடத்தால் வஞ்சித்துக் கொலைசெய்ததும், இவ்விரண்டு கள்ளவேடத்தார்களும் சிவவேடக்கோலமுடையாரென் றறிந்திருந்தும் நமது சேக்கிழார்பெருமான் அவ்விருவர் மாட்டு மிரங்காது "தீங்கு குறித்தழைத்த தீயோன்" "கடையவன்றன் நெற்றியின்மேல் வெண்ணீறு தாங்கண்டார்" "முன்னின்ற பாதக னுந் தன்கருத்தே முற்றுவித்தான்" எனவும், "மாதவ் வேடங் கொண்ட வன்கணன்" "ஆனாக் காதலஞ்சேரா வெவ்வினைக் கொடி யோன் றன்னை விட்டனன்" எனவும் கூறியருளுவாராயினர். „சிவ வேடத்தினரேயாயினும் வேடத்துக்கேற்ற ஒழுக்கமற்றவராதல் பற்றியே "தீயோன்" ,'கடையவன்" "பாதகன்"—"வன்கணன்" "வெவ்வினைக் கொடியோன்" என்பனவாகிய கொடுமொழிகளை நமது சுவாமிகள் கூறியருளினர். எந்த அடியாரையும் அடிகள் சுவாமிகள் அவர் சென்றார் என உபசரித்துப் பலர் பாலாகக் கூறுத

லல்லது ஏனைக் கவிகள் கூறியாங்கு ஒருமைப்பாவில் வைத்துக்கூறு தல்தானும் யாண்டும் மறந்துஞ்செய்யாத நமது சேக்கிழார் சுவாமி களே இங்ஙனம் கடிந்துகூறுவாராயின் ஏனையார் இக்கள்ளவேடர்களை வைதலும் அடித்தலும் உதைத்தலும் இன்னோரன்ன கொடுந் தண்டனைகளைச் செய்தலும் அறமே யாகுமன்றி மறமாகாமை நிச்சயம்.

இஃதறியும் கல்வியுணர்வற்ற பேதைகள் பலர் தம் அறியாமை யால்ஒருகால் ஒருவரை மகானாகக்கொண்டு வணங்கி விட்டால் பின் னர் அப்பாதகர்து தீயவொழுக்கங்களை எத்தனை பெருக்கமாகக் கண்ணினும் "மூர்க்கனு முதலையுங் கொண்டதுவிடா" என்றவாறே தமது மூடத்தனமான மூர்க்கத்தனத்தால் பின்னும் அவரை மகா னெனவே கொண்டு பணிந்து மீளாநரகுக்கு ஆளாகி மாள்கின்றார். என்னே இவரது அறியாமை! என்னே இவரது பாவம்! இது மட்டோ "தாமுமொரு பயப்படார் பயப்படுவார் தம்மையுந் தம் போற் செய்வார்" என்றவாறே அவ்வஞ்சகப் பாதகரின் பொய்யொ ழுக்கத்தை வெளியிட்டு இக்கொடிய சண்டாளரை விலகியுய்மின், என நீதி கூறி உய்விக்க வரும் அறிவாளிகளையும் நிந்திக்கத் தொட ங்குகின்றார். அறிந்திருந்தும் நிந்திக்கும் இந்த அதிபாதகர் தம்மைத் தண்டித்தற்கே அறக்கடவுள் தயாராக இருக்கின்ற உண்மை இனி யேனு முணர்ந்து உய்திதேடுவாராக.

உண்மை யடியார்கள் பெருமையும் பொய்வேடர் சிறுமையும் இங்ஙனமாகும். ஆகவே யாராவது ஒருவரது சரித்திரத்தை யெழு தப்புகுவோர் உண்மையினின்றும் விலகாமலும், உள்ள சரிதங்களை மாற்றாமலும், மறைக்காமலும், கூட்டாமலும், குறைக்காமலும் உள்ளதை யுள்ளவாறே யெழுதுவதுதான் முறையாகும். அச்சரித முடையார்க்கும் அதுவே பெருமைபயக்கும். அதிலும் மகான் எனும் பட்டத்தைப் புனைந்துகொள்பவர்கள் சரிதத்தை எழுதுங் கால் மிகவும் கவனித்து உலகத்தை ஏமாற்றாமல் எழுதவேண்டும். அல்லாக்கால் பாவமும் பழியுமே விளையும். இம்முறையறியாத சில பேதையர்கள் பொய்யே புனைந்தெழுதி உலகை மயக்கிக் கெடுக் கின்றனர். ஆயின் அறிவுடையார் யாரும் இப்பேதைகளின் பயனில் சொற்களால் மயங்காராயினும் உலகத்தில் அறிஞர் சிலரும் ஏனையர் பலருமாயிருத்தல்பற்றிப் பெரும்பாலார்க்கு உண்மையை விளக்கிக் காட்டல் பேரறச் செயலேயாம் என்பதை யாவரேயறியார்? இஃ தொன்றே "பொய்யுடை யொருவன் சொல்வன்மையினால், மெய்

போலும்மே மெய்போலும்மே" என்றுங்கு சிலர் சாமர்த்தியமாகக் கூறுமிடத்து அறிஞருங்கூட இஃது உண்மைதான் போலுமெனக் கருத நேரிடும். ஆகவே பொய்ச்சரித மொன்று வெளிப்படுமாயின் உடனே அதன் உண்மையை விளக்கல் எவ்வாற்றானும் உலகிற்குப் பெருநன்மை விளைக்குமென்பதொருதலையாம். சரித்திர மாறுபாடுகள் ஒழிந்து உண்மை நிலையில் வெளிப்படுங்காலந்தான் க்ஷேமமுண்டாகும். இனிமேற் பொய்யெழுதுபவரும் அஞ்சுவர். இதுகாறுங் கூறியவற்றால் ஒழுக்கத்துடன் கொள்ளப்பட்ட வேடத்துக்கே மதிப்புண்டென்பதும், ஒழுக்கமில்வழி அவ்வாறு சிவவேடம் தீமைதரு மென்பதும், அத்தீயரைத் தண்டிப்பது முறையென்பதும், சரிதமெழுதுவோர் உண்மையையே யெழுதவேண்டு மென்பதும், அல்லுழியுளதாங் கேடிது வென்பதும், பொய்ச்சரிதமெழுந்தாற் கண்டித்தல் அவசிய மென்பதும் ஒருவாறு பெறப்பட்டன.

பத்திராதிபர்.

---

# பழக்கவழக்கங்கள்*

---

"பழக்க வழக்கங்கள் மிகக் கொடியன............அவற்றின் குற்றங்களை (ஓர்சமயத்திலேனும்) உணர்ந்தவன் விவேகி யென மதிக்கப் படுகிறான்" [புத்தர்]

பழக்கம் பழகும் பொழுதும் வழக்கம் வழங்கும் பொழுதும் இடையீடின்றி முன்பின்னாய் நிகழ்கின்றமையின் அவை பற்றி ஈண்டுச் சிறிது ஆராய்தல் வேண்டும்.

அறிவுடையார்க்கு அழகு ஆவது அறிவதும் அறிந்தவாறு ஒழுகலும் ஆம்; அறிவுஇல் செய்வனவும் தவிர்வனவும் அறிவாரது ஆற்றலைப் பொறுத்துப் புலனாகின்றன.

இவைகள் இன்ன தன்மையன என்றறிந்தும் அறிந்தவாறு செய்யா தொழிவர் பலர்; அவற்றிற்குச்சில போலி நியாயங்களையும் காரணங்களையும் கற்பிப்பவரும் பலர்; அஃதொன்றோ! தாம் நன்கு அறிந்தவையும் உண்மையோ? மயக்கமோ? என்று ஐயுற்றிருப்பவரும் சிலர்.

---

* This copyright is reserved to the auther.

அறிந்தவற்றின் உண்மையைப் புலனாக்கற்குப் போதிய காரணங்கள் இயற்கையாகவே பலர்க்கு அமையாதிருக்கலாம்; அங்ஙனம் அமையாமை அவர்க்கு ஓர் இழுக்கை விளைவிக்காது; ஒன்றின் உண்மையை நன்கறிந்தும் புலனாககண்டும் அவ்வழி ஒழுகாமைக்கு அவர்போலியாகக் கற்பித்துக்கொள்ளும் நியாய காரணங்களே குற்றமும் கோளும் ஆம்;'' அறிவறிந்த ஆள்வினையின்மை பழி'' என்றார். உட்கிடையும அதுவே.

சிலர் அங்கைக் கனியென ஒன்றை நன்கறிந்தும் அதன் உண்மை கண்டும் அதனைப் பின் பற்றாது, தாம் அவ்வழி ஒழுகாமைக்கு உலகிலேயே பேரிடை யூறாகக் காட்டி. '' உலகத்தோ டொட்ட வொழுகல், பலகற்றுங் கல்லாரறிவிலாதார்'' என்ற தேவர் மொழியைத்தங்கருத்துக்கியையவிரித்துத்திரித்துரையாடி இழுக்கிநிற்பர்.

அன்னோர்க்கு அறிவுறுத்துமுறை-'' நும்மனச் சான்று அம்முறையில் யாதுரைக்கின்ற தென்பதை உண்ணோக்கில் உணர்ந்துபார்ப்போராக ! காட்டிற் சான்று அவை, நாவிறகே'' ✱என்று அடுத்தடுத்து

அச்சான்று எடுத்துக் காட்டித் தெருட்டவில்லையா ?—'' இயலான்ம உண்மைபாக இழுக்காவதின்று, இயலுவதை இயற்றுதிருப்பதும் இழுக்காம், இயலுவதை மாற்றி வைத்தலும் இழுக்காம்'' என்று பன்முறை, நும்மை அலைத்து, இடித்துரைக்கவில்லையா ? என்று வினவி அறிவு கொடுத்துத் தெளிவுகாட்டலேயாம்.

(இம்முறையை மக்களிற் பலர் தத்தமது அநுபவ வாயிலாகக் கண்டிருத்தலும் தேற்றமே.

என்னினும் பல அபிப்பிராய பேதங்கள் எதிர்பார்த்தலும் கூடும்; ஆனால் உண்மை யொன்றே பற்றுக்கோடாக் கொண்டாரின் துண்ணிய மொழியே மிகுந்து நிற்கு மென்றல் ஒருதலை.

அறிந்த வற்றிற் கிணங்க ஒழுகுதற்கும் பேரிடையூறாய்நிற்பன, அவரவாது, மாறுபட்ட பழக்க வழக்கங்களே.

அறிந்த வாறு ஒழுக விரும்பினும் முயற்சிக்கினும், அந்தோ! அவரவரின், மாறுபட்ட பழக்க வழக்கங்களின் மிகுதியால் அவரவர் எண்ணங்கள், சரிவர நிறைவேறுதொழிகின்றன.

---

✱ இப்பெயர் பூண்ட பொருளுரை யொன்று ஆராய்ச்சிமுகத் தான் விரைவில் வெளிவரும்.

உதாரணமாக தம்மையறிந்தோ அறியாதோ இளமையில் பொடிப் போடல், புகையிலை யடக்கல முதலியவற்றைச் சிலர் பழக அப்பழக்கங்கள் நாளடைவில் முதிர்ந்து வழக்கமாகி விடுகின்றன. பின்னர் அவர் அவற்றின் தீமைகண்டு அறவொழிக்க விரும்பி எத்துணையோ முயற்சி புரியினும உண்மையில் அவைகள் அவர்கை நழுவ அருமை யாகின்றன— ஒரோவழி, அவரது வைராக்கிய மிகுதி பற்றி அவை நழுவி நிற்பினும்—நோய்முதலியன அவற்றின் அடிப் படையாகத் தொடர்தலுங் கண்கூடே.

ஆகவே அவற்றை இரகசியத்திலேனும் கையாடுதல் இன்றியமையாத தாயிருக்கின்றது.

அந்தோ! மாயப் பழக்க வழக்கங்களே! எத்துணை கொடுமை இழைக்கின்றீர்கள்? அறிவினுந் திருவினும் சிறந்தோர் சிலரும் பேராற்ற லுடையோர் பலருமாக எத்துணையர் நும் வாய்ப்பட்டுத் திகைத் துழல்கின்றனர்?- நும் பெருமையை யறிந்துதான் பலர் நும்மையண்டாது போயினர் போலும்?—பழகக் கொடியதுபார் பாசையையுங் கோழிகிழிக்கும்'' என்பதும் ஓர் முதுமொழியே: நிற்க.

இப்பழக்க வழக்கங்களுக்குத் தோற்றுவா யாது? இடம் பொருள் ஏவல்கள் என்ப.

பழக்க வழக்கங்கள் வெள்ளுடையிற் படியும் மாசுபோன்று. தம்முணர்வின்றியும், அகத்தில் அணுவணுவாகப் பற்றி நாளாவட்டத்தில் படர்ந்து நலிவுறுத்துவனவாகும் அவற்றினுக்குத் தூண்டு கோலாய் நின்று உதவுவன, ஆரம்பத்தில் வந்திணைந்த இடம் பொருள் ஏவல்களே. என்ற வாக்கும் தக்க சான்றாகும்.

இடம் பொருள் ஏவல்களோ, முற்றுந் துறந்த முனிவரரையும் பற்றி வருவ வெனின் ஏனையரைப் பற்றி நலிசித்தல் வியப்பன்று. தாயுமானாரும் ஓரமயம் "இடம் பொருளே வலைக்குறித்து மடம் புகுதா யெனவே, எங்கே நீயகப்பட்டா யிங்கே நீ வாடா'' என்றருளிப் போயினர். நிற்க.

தொடக்கத்தில் ஒன்றைப் பழக, அப்பழக்கமே முடிவில் வழக்கமாக மாறிவிட்டதென்பது எம்மனிதரும் அவரது அநுபவவாயிலாகவும் அறிந்து கொண்டதாகும்— முதலில் ஒன்றைப் பழகவுஞ் செய்யாதார் எதனைபற்றி அங்ஙனம் வழங்குவர்?...ஒரோவழி

விபாதத்தின் முதலை யாதியர்க்கு ஒல்லுமெனின் அதுபற்றி விளையும் பயன், உலகவியலில்; பொருந்தி நிற்குமா ?— பொருந்தாமை ஒருதலையே. நிற்க.

இத்தகைய பற்றைக் களைய ஓர்வழி யுண்டாங்கொல் ? ஆக்குவாய் உண்டெனிற் போக்குவாயும் உண்டு என்றல் தொன்னூலாசிரியர் துணிபாதலின், இதற்கும் ஓர் வழியிருத்தல் வேண்டும்.

"இரும்பினை யறுக்க மற்றோர் இரும்பினை வேண்டல்போன்று ("அயிலாலே போழ்ப அயில்") (பழமொழி 337) இதனை இதனால் ஒழிப்பர் அறிஞர்.

உறையுள் இருவாள் சின்னாள் கையாடப் பெறுதிருப்பின் அதன் முன் ஒளியையும், கூர்மையையும் இழத்தல் மட்டோ—புதியன இழைத்தற்கும் இயலாவண்ணம், அதனையறியாது படர்ந்துவரும் துருவால் முன்னைய உருக்குலைந்தும் கெட்டழிதல் அனுபவத்திலும் கண்டறிவதே. இஃதொருவகை.

நாடோறும், காலையில் இரண்டுபடி மதுவருந்தும் வழக்கமுடையோன், ஒருவன் ஒருகால் ஓர் அறிஞரால் தெருட்டப் பெற்று, அக்குடியின் தீமையைப் புலனாக்கண்டுணர்ந்து, அதனைக் கைவிட விரும்பினான்; அதற்காக தான் மதுபருகு கலயத்தில் நாள் தவறாது குன்றி யளவாய் ஒவ்வோர் கல்லிட்டுப்பருகிவர நாளடைவே அவனை யறியாது அப்பருகுகலயம் அவனிட்ட சிறிய மணிக்கற்களால் நிறம்பப்பெற்றது. முடிவில் கள்ளுண்ணும் வழக்கம், அவன் மெய்ம்முனிவின்றி அவனைவிட்டு விலகியது; இது மற்றோர் வகை.

முன்னைய. உபாயம் வாலிபர்க்குரியது; பின்னையது முதியவர்க்கு உரியது.

அறிஞரும் இவ்விரண்டு உபமானங்களைக் கொண்டு, உப்மேயங்கண்டு, தத்தமக்கியைந்தவாறு தத்தமது பழக்க வழக்கங்களை அறக்களைந்து நல்வழிப்படுவராம்; ஆம் என்பதென்னை. உண்மையும் அதுவே.- (தொடர்ச்சியுண்டு).

தச்சநல்லூர் }
18- 7- 14 }

நச்சுவார்க்கினியன்

# காக்கை ஓர் பறவை,

(௯௪-ம். பக்கத் தொடர்ச்சி.)

காக்கை தமக்கிரையாயின் கண்டவழி மறையாது இனத்தை அழைத்து அதனோடுங்கூட உண்ணா நிற்கும். இதற்குச் செய்யுள்.

"காக்கை கரவா கரைந்துண்ணும்." (திருக்குறள், ௫௨௭.) எனவும், "காக முறவு கலந்துண்ணக் கண்டீர்." (தாயு, கர்மேக், ௩.) எனவும் வரும்.

காக்கைகள் அதிகாலையிற் கண்விழித்து எழும்; மறைவிடங்களில் ஆணும் பெண்ணும் புணர்ச்சி விரும்பிக் கலந்திருக்கும்; அந்தி நேரங்களிற் றலைமுழுகித் தம் கூண்டில் அடையும்; தமக்கிரையாயின கண்டவழித் தம் இனத்தை அழைத்து அதனுடன் கூடியுண்ணும். கல்லெறி, வில்லுண்டையடி, துப்பாக்கிச்சூடு முதலியவற்றிற்குத் தம் உயிரைத் தப்பிக்கொள்ளும். இவைகட்குச் செய்யுள்:—

"காலை யெழுதல் கரவிற் கலந்திடுதல்
மாலை முழுகி மனைபுகுதல்—சாலவுறவர்
துற்றாரோ டுண்ட லுயிர்காத்த லிவ்வைந்துங்
குற்றமில் காக குணம்." எனவரும்.

இதில் "உற்றாரோ டுண்டல்." என்றது, முன் கூறிய கூடியுண்டதுக்கும் ஏற்கும்.

காக்கையின் மனம்பார்ப்பார் தங்களின்கடினமனத்தைப்போன்றது; அதாவது, கொஞ்சமும் இரக்கம் இல்லதென்பதிதன் கருத்து. இதற்குச் செய்யுள்:

"தன்மனப் பார்ப்பார் தங்களைப் படைத்துக்
காகத்தை யென்செயப் படைத்தாய்." (விவேகசிந், ௮௨) எனவரும்.

மனிதர்கள் பிரயாணஞ்செய்யுங் காலத்தில், காக்கை வலமாயின் அது சுபசகுனம்; அதனாற் குறித்துச்சென்ற காரியம் கைகூடும். இதற்குச் செய்யுள்:

"கரிமயில் பசுங்கிளி கோழிகொக் கொடுகாக்கை
நாவிசிச் சிவியோர்ந்திதான்,..............அனைத்துவல மாயிடின்
வழிப்பயண மாகைநன்றே." (அறப், ௯௩.) எனவரும்.

மனிதர்கள் பிரயாணம் செய்யுங் காலத்தில் காக்கை இடமாயின் அது அவசகுனம்; அதனாற் குறித்துச் சென்ற காரியம் கைகூடாது. இதற்குச் செய்யுள்:

"பைந்தமிழ்" என்ற செய்யுளில், "அந்தோ,
அடியீடுமு னையர்க் கடுத்தவா கெட்டேன்
கொடியிடமாய்ப் போந்த குறை." கொடி—காக்கை.
(மதுரைக்கலம்பகம், ௫௪.) எனவும்

"ஏகும்மன வையின்" என்ற செய்யுளில், "இடமும், காகம் முதலிய முந்திய தடைசெய்வன கண்டரன்." (கம்பராமா, பரசுராமா, ௫.) எனவும், "புட்பகை." புள்ளின் தீயநிமித்தம்; அது காகம் இடமாதல். வே. சாமிநாதையர் அவர்கள் குறிப்புரை (புறநானூறு, ௯௮; 11) எனவும் வரும்.

காக்கை பகற்போதில் கூகை யென்னும் பறவையை வெல்லும். பசுவாய் அல்லது கரிக்குருவியின் தலையைக் கொத்தி மிகத் துன்பம் செய்யும்.

கூகையைவெல்லும் என்றது, காக்கைக்குஅமைந்த 'உலூகாரி' என்ற பெயரானே விளங்கும்.

அன்றியும் இதற்குச் செய்யுள்:

"பகல் வெல்லுங் கூகையைக் காக்கை." (திருக்குறள், ௪௮௧) எனவும், "காகம் பகற்காலம் வென்றிடுங் கூகையை." (குமரேசசதகம், ௯௯.) எனவும்,

"கயிலை யண்ணல் கதையை இகழ்ந்துழித்
துயில் புரிந்திடுந் தொல்வினைப் பாதகர்
வெயில் காந்திடு வெங்கொடிக் கஞ்சியே
பயின்முட் காட்டுறை கூகைய தாகுவார்."
(பிரமோத்தரகா, வஞ்சனோமுத்தி, ௨௫.) எனவும் வரும்.

கரிக்குருவியைத் துன்பஞ் செய்யுமென்றதற்குச் செய்யுள்:
"ஆற்றல்சால்" என்னும் செய்யுளில்,

"தேற்றமில் கயவா யாகிச் செனித்தலாற் காக மாகி, கூற்றென ஆற்றஞ் செய்யக் குருதிசோர் தலைய தாகி." (திருவிளையா, கரிக்குரு, ஙூ.) எனவரும்.

காக்கை கல்எறிக்குப் பயந்தோடும்; கடலிற்செல்லும்; கப்பலிற் கட்டிய பாய்மரக்காற்றில் அகப்பட்டால் திரும்பி வாரா; இராக் காலத்தில் கூகையைக் கண்டஞ்சிப் பின்னிடும்; முன் கரிக்குருவிக் குத் துன்பம்செய்த காக்கைகள் ஒரு காரணத்தால், பின் அவை களுக்குப் பின்னிடைந்து அபசயப்படும்.

கல்லெறிக்கு ஓடும் என்றதற்குச் செய்யுள்:
"காகமா னவைகோடி கூடினின் றாலுமொ ரு
கல்லின்மு னெதிர்நிற்குமோ." (தாயு, எந்து, கூ.)எனவும்,
பாய்மரக்காற்றில் அகப்பட்டால் திரும்பா என்றதற்குச் செய் யுள்:
"ஆட்ரவின் வாயி லகப்பட்ட தவளையும்
ஆனைவா யிற்கரும்பும்,
ஆழிதான கப்பலிற் பாய்மரக் காற்றினில்
அகப்பட்டு மெலிகாக்கையும்." (குமரே, ௯க.) எனவும்,
இரவில் கூகைக்கு அஞ்சும் என்றதற்குச் செய்யுள்:

"மற்காக்கும்" என்ற செய்யுளில்,
"அற்காக்கை கூகையைக்கண் டஞ்சினவர மெனவதன்றூர்." (கம்பரா, கார்மு, உரு.) எனவும்,

கரிக்குருவிக்கு அபசயப்படும் என்றதற்குச் செய்யுள்:
"என்ன" என்றசெய்யுளில், "அன்ன புட்கெலாம் வலியை யாகென்." "வலியை யென்பிதென் மொழி னுக்கெலாம், பொலிய வேண்டுமெப் போதும்." (திருவி, கரிக்கு, கஅ, கக.) எனவும் வரும்.

• கீர்த்தையின் அபசயத்தைக் குறித்த விருத்தாந்தம் ஒன்றை இங்ஙனம் வரைகின்றனன். அதாவது:—

பாரதப் போர்முடிவில் அசுவத்தாமன் சேனைத்தலைமைபெற்று இராக்காலத்தில் பாடி வீட்டில் நித்திரைசெய்யும் திட்டத்துய்மன், இளம் பஞ்சபாண்டவர் முதலான ஏனையோரையும் கொல்லுவான் கருதி, கிருபன், கிருதவன்மன் ஆகிய இவ்விருவருடன் குதிரை கட்டிய தேரின்மேல் ஏறிக் காட்டின் மார்க்கமாய்ச் சென்றனன். அப்போது இராக்கால மானதுபற்றி அங்கிருந்த ஒருபெரிய ஆல விருக்ஷத்தின்கீழ் இறங்கி, கிருபன், கிர்தவன்மன் இருவரும் நித்திரைசெய்ய, அசுவத்தாமா கொஞ்சங்கூடத் தூக்கம் பிடியாதவனாகி அம்மரத்தடியில் மிகத்துக்கத்தோடு கண்விழித்துக் கொண்டிருந்தனன். அங்ஙனமாக அந்த வடதருவின்மேல் பலகாகங்கள் ஒன்றுகச்சேர்ந்து நித்திரை செய்துகொண்டிருந்தன. இருக்கவே, அந்தச்சமயம் பார்த்துக் கருமையும் செம்மையும் கலந்த நிறத்தினையுடைய பெரியதோர் கூகையானது அக்காகங்கள் அஞ்சுமாறு முகவில் ஒரு சிறிய தொனியைக் காட்டித் தன் தேகத்தை மறைத்து வசித்திருந்தது. இவ்விஷயத்தைப் பார்த்த அசுவத்தாமன் பின்னர் நிகழும் விஷயங்களையும் பார்ப்போம் என்ற எண்ணத்துடன் இருந்தனன். இருக்கவே அந்த வலியகூகை, அக்கரிய காக்கைக் கூட்டங்கள் மிக அஞ்சும்படி ஒரு பெரிய சத்தம்போட்டு அவைகளைக் கலைத்து, தலைவேறு, சிறைவேறு, மூக்குவேறு, நாக்குவேறு, உடல்வேறு, குடல்வேறு, வால்வேறு, கால்வேறு ஆகும்படி சின்னபின்னம்செய்து உயிருண்டது. இது "முற்பகல் செய்யிற் பிற்பகல் விளையும்." "முன்வென்றவர் பின்தோற்பர்." என்ற முதுசொற்களை விளக்கியும், "அற்பர்கள் பலர்கூடினும் ஒரு ஆண்தகுதியுடைய வீரன்முன் நிற்கமாட்டார்" என்பதையும் விளக்கிற்று. இச்செயலை நோக்கியிருந்த அசுவத்தாமன், நாம் பாசறையிற்றுஞ்சும் மக்களைக் கொல்லுதற்கு இதுஒரு நற்குறி எனக்கருதி, அந்தக்கூகையை ஒரு நல்லாசிரியனாகக் கொண்டு பாசறை யுத்தம் ஆரம்பித்தனன். இவ்வரலாறு அடியிற் காட்டிய பாட்டுகளால் நன்கு விளங்கும்.

"இரவினி லுறங்கா திவ்வா றிருந்துழி யிவுளித் தாமன்
பரவுபல் காகந் துஞ்சும் பணைமலி கோளி யின்மேல்
உரமிகுங் கரிய செய்ய வுருவுட னொலிக்கும் வெய்ய
குராலினைக் காட்டிச் செல்லுங் குராலினைக் குறித்துக் கண்டான். (௩௪)

இவுளித்தாமன்—அசுவத்தாமன். கோளி—ஆலமரம். குரால்—கோட்டான்.

"பெரியவக் கூகை பின்னர்ப் பிறங்கொலி யொன்று செய்து
விரிநிழற் கொம்ப ரூடு மேனியை மறைத்து வைகித்
திரியவுங் கொடிக ளெல்லாந் திடுக்கிட வெழுந்து பதறிக்
கரியவக் காக்கைக் கூட்டங் கலைந்துயி ருண்ட தன்றே." (௩௫)

கொடிகள்—காக்கைகள்.

"கலைத்துயி ருண்டு காக்கைக் கால்களுந் தலையு மூக்கும்
அலைத்திடுஞ் சிறையும் வாலு மடங்கலும் வேறு வேறா
உலைத்துடல் பறித்து வீசி யொருசிறி திடமில் லாமல்
இலைத்தடங் கோளி யெங்கு மிறைத்தினி திருந்த தம்மா." ()

"முற்பக விழைத்த தீமை முற்றிடுங் கொடியர் தம்பால்
பிற்பக லொருகால் 'வென்றோர் பின்னொரு காலந் தோற்பார்
அற்பர்கள் பலரு மாற்று ராண்டகை யொருவற் கென்னும்
சொற்பொரு டெளிய யாருந் தொலைந்தன காக்கைக்கூட்டம்."

"ஆகுமச் செய்கை கண்ட வப்பொழு தசுவத் தாமன்
கூகையைக் குரவ னாகக் கொண்டிது குயிற்று மாற்றால்
ஏகியா மொருவ னாக விரவினில் விரவ லார்க்கு
மாகநா டளித்து மென்று மனத்திடை வலித்தான் மன்னோ"

(சேதுபுராணம், அசுவத்தாமச்சருக்கம்.)

காக்கைகளின் சயாபசயத்தை, "பகலெலாங் காகங் கூகை பகைத்திட வதைக்குங் கூகை, இகலிரா முழுதுங் காக மெழும்பிடா தடிக்கும்." என்ற பஞ்சதந்திரம், சந்திவிக்கிரக தந்திரத்து, ஏழாவது செய்யுளால் உணரப்படும்.

இன்னும் (வரும்.)

I. M. முருகய்ய வாத்தியார்,
தலைமை, B. E. ஸ்கூல், செங்கிப்பட்டி, தஞ்சாவூர் தாலூகா.

# கமலினி.

(௯௦௦-ம் பக்கத் தொடர்ச்சி.)

அங்கம் IV களம்-1

இடம்: நெல்வேலி மன்னனரண்மனையி லோரறை.

காலம்: ராத்திரி.

கமலினி:—(தனியே அழுதுகொண்டு படுத்திருக்கிறாள்) ஏ செந்திலாதிபா! இப்பாவியின் மனக்கவலை நீங்குவதற்கு இன்னுங் காலம் வரவில்லையா? எப்பொழுதுந் துன்பமே யனுபவிக்க வேண்டியதுதான் என்னுடைய விதிபோலிருக்கிறதே, நானென்ன செய்வேன்? அவர்களிவ்விதமாகவே யிருந்துவிட்டால் என்கதி எப்படியாகும்? அவர்கள் மனமென்ன கல்லா? நான் எவ்வளவு அன்புடனும் பணிவுடனும் நடந்து வந்த போதிலும் அவர்கள் மனம் சந்தோஷமடையவில்லையே! இவ்விதமவர்களிருப்பார்களென்று நான் கனவிலும் நினைக்கவில்லை. இதற்குமுன் கமலினி யென்றுயிரை விடுவீர்களே! அப்படியிருந்தவர்களிப்பொழுதிவ்வளவு வெறுப்புடனிருப்பது என்னுடைய துர்ப்பாக்கியத்தினாலல்லவா? ஆனால் இவற்றிற்கெல்லாமிப்பாவியே காரணம். முன்னவர்கள் என்பேரில் வைத்திருந்த நேசத்தைக் கொண்டு திருப்தியடையாமல் பேராசைப் பட்டு இருந்த நேசத்தையுமிழந்தேன். முன்னிருந்தபடி யிருந்திருப்பேனாகில்அவர்களென்னுடன் பேசிக்கொண்டாவது இருப்பார்கள். அதிலாவது திருப்தியடையலாம். இப்பொழுது அதுவு மில்லாமற்போயிற்று. விவாகமாய்ச் சுமார் மூன்று மாதங்களாகியும் என் நாதன் இதுவரை என்னுடன் ஒருவார்த்தை கூடப்பேசவில்லை ஆனாலென்பில்லாவிட்டால் என்ன ஏதாவது குறைவாக நடத்துகிறார்களா? துன்புறுத்துகிறார்களா? அதுவுமில்லை. ஆனால் அவர்கள் பேசாமலிருப்பது என்னைத் துன்புறுத்துவதைவிட பதின் மடங்கு அதிகவருத்தத்தை யுண்டுபண்ணுகிறது. சக்ரவர்த்தி முதலிய எல்லோரு மிவ்விதம்நேரிடுமென்று சொன்னார்களே! அவர்கள் வார்த்தையைக் கவனியாமல் என்னு லன்பைச் சம்பாதித்துக்கொள்ள முடியுமென்று இறுமாப்புடனிருந்தேனே! இப்பொழுது நானென்னசெய்துமென்னு லவர்களுடைய அன்பையடைய முடியவில்லையே!நானென்ன செய்யப்போகின்றேன். தெய்வமேநீதான் என்மனக்கவலையைநீக்கவேண்டும். நான் தான் இப்படித் துன்பப்படுகிறேன். அவர்களாவது கவலையற்றிருக்கிறார்களா? அதுவுமில்லை. இப்பாவியின் பேராசையால் அவர்களுடைய வாழ் நாட்களும் வீணாகவே போகின்றன. அதை நினைக்கும் பொழுது என்மன மின்னுமதிகத் துயரமடைகின்றது. இப்படி நானுந்துன்பப்பட்டுக்கொண்டு அவர்களையுந் துன்பப்படுத்திக் கொண்டிருப்பதை விட நானிறப்பது மிக்க நலம். என்கவலையு மொழியும். அவர்களுந்தன்மன திருப்திக்கிசைந்தபெண்ணை விவாகஞ்செய்துகொண்டு சுகமாகவிருப்பார்கள். ஆகையால் சீக்கிரத்தில் என் மனக்கவலை நீங்காவிட்டால்

டானிறப்பது திண்ணம். (கொஞ்சநேரம் மௌனம்) எனக்கொருவழியுந் தோன் றவில்லையே! நானென்ன செய்யப் போகிறேன்? நீ கருணை புரிந்து முன்போ லென்னைக் காப்பாற்றினாலல்லது எனக்கு வேறுவழி யொன்றுந் தெரியவில்லை.

" கொள்ளித லையி லெறும்பது போலக் குலையு மென்றன்
றுள்ளத் துயரை யொழித்தரு ளாய் ஒரு கோடி முத்தந்
தெள்ளிக் கொழிக்குங் கடற்செந்தின் மேவிய சேவகனே
வள்ளிக்கு வாய்த்தவ னேமயி லேறிய மாணிக்கமே."

(என்று பாடிவிட்டுப் படுத்துக் கொள்கிறான்.)

---

களம் 2.

இடம்: நெல்வேலி அரண்மனைத்தோட்டம்.

காலம்: மாலை.

வீரகேசரி:—(தனியே வருகிறார்) இவ்வளவு மனக்கவலையுடன் இவ்விரா ஜ்ஜியத்தை யாளுவதிலும் சண்டையிற் போயிறப்பதே உத்தமம் இம் மூன்று மாதங்களாக நான்படுகிற மனத்துயரத்திற் களவேயில்லை. இவ்விதத்துயரமேற் படுமென்று முன்னமே தெரிந்திருந்தும் அதை விலக்க முடியாமற் போனது என்னுடைய ஊழ்வினையினாலல்லவா? கமலினியிடத்தில் விவாகத்திற்கு முன் னிருந்த பிரியமும் போய் அவளிடத்திலொரு விதமான வெறுப்புமேற் பட்டு விட்டது. நான் ஒரு ராஜவம்சத்திற் பிறந்த அரசனாயிருந்தும் எனக்கு இக்கதி யேற்பட்டதே! மனதிற்குத் திருப்தியென்பதில்லாமல் எப்பொழுதும் வருத்தப் பட்டுக் கொண்டிருப்பதைவிட தேசாந்திரியாய் எங்கேயாவது போய் என்துயரத்தை மாற்றிக்கொள்ளலாமென் றெண்ணிக்கொண்டிருந்தேன். ஆனால் ராஜ்யத்தை விட்டு விட்டு அப்படிப் போவது ராஜதருமத்திற்கு விரோத மாகுமே யென்ற எண்ணம் மனதைச் சஞ்சலப்படுத்திக் கொண்டிருந்தது. இப் பொழுது நமதுசக்ரவர்த்திக்கும் சோழராஜனுக்கு மேற்பட்டிருக்கிற சண்டை யானது நல்ல சமயத்திலேற்பட்டது. எல்லாச் சிற்றரசர்களுஞ் சண்டைக் காயத் தமாயுடனே புறப்பட்டுவரவேண்டுமென்றும் என்னையே சேனைகளுக்குத் தலை வனாகநியமித்திருப்பதாகவும் சக்ரவர்த்தியிடமிருந்து இன்று உத்தரவு வந்திருக்கி றது, சண்டைக்குப்போனால் உயிருடன் திரும்பிவருவது அவ்வளவு நிச்சயமான காரியமல்ல. நானும் திரும்பிவரவேண்டு மென்றெண்ணவுமில்லை. இங்கிருந்து கஷ்டப்பட்டுக்கொண் டிருப்பதைவிட சண்டையிற் போயிறந்தாலும் கீர்த்தியா வது கிடைக்கும். ஆனலப்படி நானிறந்துவிட்டால் என்தாய் மிகுந்த துயர மடைவார்கள். அதற்கென்ன செய்வது? அவர்களே என்னை இக்கதிக்காளாக்கி னார்கள். அதனாலுண்டாகும் பயனை அனுபவிக்க வேண்டியவது மவர்கள்தானே?

சேனைத்தலைவனாகவிருப்பதால் சண்டை அகோரமாய் நடக்கிற இடங்களுக்கெல்லாம் போகும்படிநேரிடும். அப்படி நேரிடாவிட்டாலும் நானே ஆபத்துண்டாகக்கூடிய இடங்களுக்கெல்லாம் நேரில்போகிறேன். அப்படியாவது என்னுயிர் போய்விட்டால் நலந்தான். என் தாயிடம் விடைபெற்றுக் கொண்டு சீக்கிரம் போகவேண்டும். (போகிறார்)

### களம் 3.

இடம்: ஷெ அரண்மனையிலொரு அறை.

காலம்: ராத்திரி

(மங்கையர்க்கரசியும் கமலினியு முட்கார்ந்திருக்கிறார்கள். வீரகேசரி வருகிறார். கமலினி எழுந்து ஒருபக்கமாய் நிற்கிறாள்.)

வீரகேசரி:—அம்மா! சக்ரவர்த்தியிடமிருந்து என்னை வரும்படி உத்தரவு வந்திருக்கிறது.

மங்கையர்க்கரசி:—என்ன காரியத்திற்காக?

வீரகேசரி:—நமது சக்ரவர்த்திக்கும் சோழராஜனுக்கும் கொஞ்சகாலமாய் விரோதமாயிருந்து கொண்டிருந்த தல்லவா? இப்பொழுது சோழராஜன் நமது சக்ரவர்த்தியின் பேரில் படையெடுத்து மதுரைக்குச் சமீபத்தில்வந்து விட்டாராம். ஆகையால் எல்லாச் சிற்றரசர்களையும் யுத்தத்திற்கு வரவேண்டுமென்று உத்தரவு அனுப்பியிருக்கிறார்கள். மேலுமென்னை இந்த யுத்தத்திற்குச் சேனைத் தலைவனாக நியமித்திருப்பதாகவு முத்தரவு வந்திருக்கிறது.

மங்கையர்க்கரசி:—உன்னுடைய தகப்பனுடைய மகனல்லவா நீ? உன்னையல்லாமல் வேறுயாரை சேனைத்தலைவனாகநியமிக்கக்கூடும்! யுத்தத்திற்குப்போய் சோழனைவென்று உன்னுடைய பெயரையும் நிலைநிறுத்தி க்ஷேமமாய்வந்து சேரும்படி கடவுளைப் பிரார்த்திக்கின்றேன்.

வீரகேசரி:—எதற்காக க்ஷேமமாக வந்து சேரவேண்டுமென்று பிரார்த்திக்கின்றீர்கள்? நான் இம்மூன்று மாதங்களா யனுபவிக்கிற துன்பம் போதாதா? இன்பமனுபவிக்க வேண்டுமென்று திரும்பிவரச் சொல்லுகிறீர்களா?

மங்கையர்க்கரசி:—ஏனப்படிச் சொல்லுகிறாய்? உனக்கென்ன அப்படித் துன்பம் நேரிட்டுவிட்டது?

வீரகேசரி:—என்ன துன்பமென்று என்னைக் கேட்கவேண்டுமோ? உங்களுக்குத் தெரியாதோ? நான் யுத்தத்திற்குப்போய்த்திரும்பிவாராமலிருக்கவேண்டுமென்றல்லவோ பிரார்த்தித்துக் கொண்டிருக்கிறேன் (கமலினி அழுது கொண்டு அவ்விடம் விட்டுப் போகிறாள்)

மங்கையர்க்கரசி:—அப்பனே! அப்படியொன்றுஞ் சொல்லாதே. உனக்கேதாவது ஆபத்து நேரிட்டால் என்னுடைய கதி எப்படியாகும்? கமலினி தான் என்ன செய்வாள்?

வீரகேசரி:—நீங்களிருவருந்தானே என்னை இத்துன்பத்திற்காளாக்கினீர்கள். இங்கிருந்து இவ்வளவு மனத்துயரத்தை யனுபவிப்பதைவிட சண்டைக்குப் போய் திரும்பிவாராமலிருக்கும்படியான வழியைத்தேடிக் கொள்வது உத்தமம் என்ற தீர்மானத்துடன் தான் போகிறேன்.

மங்கையர்க்கரசி:—(அழுது கொண்டு) நானுன்னைப் பெற்று இவ்வளவு காலம் வளர்த்துவந்ததற்கு இதுதானா நீ செய்யுங்கைம்மாறு? இதுதானா நீயுன் தாய்க்குச் செய்யுங்கடமை? என்னைய நாதியாய் விட்டு உன்பாத துறவைத்தலை மேற்கொண்டு நேசிக்கின்ற அப்பெண்ணையும் அலங்கோலமாக்கி,இவ்விராஜ்யத்தையுங் கெடுத்துவிடக் கூடிய இவ்வெண்ணமுனக் கெப்படி யுண்டாயிற்று? ஏதோ கமலினியு மதிககாதல் கொண்டிருக்கிறளேயென்று நினைத்தும் சக்ரவர்த்தியுஞ் சொன்னர்களே யென்று நினைத்தும் நீயுமிவ்வளவு வைராக்கியமாயிருப்பாயென்று நினையாமலும் நான் விவாகத்திற்குச் சம்மதித்தேன். அதற்காக நீ இப்படிச் சொல்வது சரியா? அவ்விதமான தீர்மானத்தை விட்டு விடு விட்டதாக என்னிடம் உண்மையாகச் சொல். அப்படிக் கில்லா விட்டால் நீ புறப்பட்டுப் போவதற்கு முன் எங்களிருவர்களுடைய உயிர்களையும் வாங்கிவிட்டுச் செல்.

வீரகேசரி:—ஏனம்மா அப்படிச் சொல்லுகிறீர்கள்?

மங்கையர்க்கரசி:—வேறெப்படிச் சொல்லச் சொல்லுகிறாய்? உனக்குப் பின் நாங்களிருவர்களும் உயிருடனிருப்போ மென்று கனவிலும் நினையாதே.

வீரகேசரி:—சரிதான். சண்டையில் இயல்பாகவே இறககும்படி நேரிட்டால் அதற்கென் செய்வது?

மங்கையர்க்கரசி:—நமதாண்டவன் கிருபையால் அப்படி யொன்றும் நேரிடாது. மிஞ்சி அப்படி நேரிட்டாலும் நேரிடட்டும். அதற்காக உன்னைச் சண்டையிற் பின்வாங்கச்சொல்லவில்லை. ஆனல் நீயாக திரும்பிவாராமலிருக்கும்படியான வழியைத்தேடிக்கொள்வதாய் தீர்மானஞ்செய்திருக்கிறதாகச் சொன்னாயே. அத்தீர்மானத்தை விட்டுவிடு. இல்லாவிட்டால் எங்களிருவர்களுடைய பழியுமுன்னைச்சாரும்.

வீரகேசரி:—அப்படியே விட்டுவிட்டேன். தங்கள்சொல்லை எப்பொழுது மீறி நடந்தேன்? இப்பொழுது நடக்கப்போகிறேன்? என்னுயுசுவரையில் துன்பமனுபவிக்கின்றேன்.

(இன்னும் வரும்)

டி. எம். சங்கரலிங்கம் பிள்ளை.

# ஆங்கிலமுந் தமிழும்.

(௮௱-ம் பக்கத் தொடர்ச்சி.)

இப்பழைக்கெல்லாந் தப்பிய நூல்கள் அச்சியற்றப்பெற்றும் அவற்றைப் படிப்பாரில்லாமற் போனதற்குக்காரணம் சிலவுள. அவை யாவன:— (1) இராஜாங்கத்தார் தமிழ்ப் பாஷாபிவிருத்திக்காகத் தனியே வித்தியாசாலைகள் ஏற்படுத்தாமை. (2) இராஜபாஷை ஆங்கிலமாயிருத்தலால் அதனைப் படித்தவர்க்கு வேதனங் கிடைத்தல் போலத் தமிழை நன்குபடித்தவர்க்குக் கிடையாமை. (3) நீதிஸ்தலங்களிற் பெரும்பாலும் வியவகாரம் ஆங்கிலத்தில் நடைபெறுதலால் நியாயவாதிகளாகிய வக்கீல்களும் ஆங்கிலத்தை மிகுதியாகக் கற்றுத் தமிழைக் கைவிடல். (4) இவ்வாறு ஆங்கிலம்படித்த பலர்க்கும் அவ்வாங்கிலத்திற் பற்றதிகமாகித் தமக்குரிய தமிழிற் பற்றுக்குறைதல் என்பனவாம். ஆங்கில கலாசாலைகளில் தமிழ் ஒரு இஷ்டமான பாடமாக ஏற்பட்டிருப்பினும், இதனை யெடுத்துக்கொண்டிருப்பவர் ஒரு சிலரேயாவர். இவர்கட்கு ஒருசமயம் தம் தாய்ப்பாஷையிடத்து அன்புதோன்றினும், இதிலே அதிகப் பயிற்சியின்மையால் "ஈநஹ்ராவிலவிஷம்பாஷம்" என்றவண்ணம் பழைய தமிழ்நூல்கள் விஷயமாகத் தோன்றுகின்றன. அப்பொழுது அவர்கள் தமிழ்ப்பாஷை மிகக் கடினமானதென்றும், இதற்கேற்பட்டிருக்கும் புணர்ச்சி விதிகள் பயனற்றவையென்றும்; இப்படிப்பட்ட சந்தி போடுகூடிய செய்யுள் நூல்கள் தமிழில் மிக்கிருத்தலால், அவற்றை விட்டு இனிச் சந்தி சேர்க்காமல் தமிழ்வசன நூல் இயற்ற வேண்டுமென்றும் கூறுகின்றார்கள். இவர்கள் பீ. ஏ. பட்டம் பெறுவதற்குக் குறைந்தது 15-வருஷம் படிக்கிறார்கள். இந்தப் பதினைந்து வருஷங்களில், முதலில் இரண்டொரு வருஷம் தமிழைமட்டுஞ் சிலர் ட. விலிருந்தும் சிலர் அ. விலிருந்தும் ஆரம்பித்துப் படித்து நாலெழுத்துச் சேர்க்கத் தெரிந்தபிறகு, இரண்டுமூன்று வருஷம் ஆங்கிலமுந் தமிழும் கலந்துபடிக்கிறார்கள் இவர்களில் அநேகருக்குத் தமிழ் நெடுங்கணக்கே தெரியாது. பின்னர் 10-வருஷம் பெரும்பாலும் ஆங்கிலமும், இடையிடையே சிறிது தமிழுங் கற்கிறார்கள். ஒருநாளைக்கேற்பட்டிருக்கிற பள்ளிக்கூட நேரம் ஐந்துமணியில் இவர்கள் தமிழ் படிப்பதற்கு ஒரு மணிநேரங் கிடைத்தல்தானும் அருமையாகும்

இவ்வாறு இவர்கள் படித்தலால், சற்றேறக்குறைய நாலுபங்கு ஆங்கிலத்திலும், ஒருபங்கு தமிழிலும் பயிற்சி பெறுகின்றார்கள். அதனால் இவர்களுக்கு ஆங்கிலம் இலகுவாகவும், தமிழ் கடினமாகவும் தோன்றுகின்றன. தமிழிற் சிறிதுதிகமாகவும் ஆங்கிலத்திற் குறைவாகவும், பயின்ற என்னைப்போன்றவர்கட்குத் தமிழ் இலகுவாகவும், ஆங்கிலங் கடினமாகவுந் தோன்றுகின்றன. ஆனால் நன்கு பயின்றவர்களுக்கு இரண்டும் இலேசுதான். பாஷை பயிலுவதில் ஒவ்வொன்றிலும் சில வருத்தம் உண்டு. இதனாலல்லவா "தொடங்குங்காற் றுன்பமா யின்பம் பயக்கும், மடங்கொன் றறிவகற்றுங் கல்வி" என்று ஆன்றோர் கூறினர்? தமிழிற் சந்தியிலக்கணம் கடினமென்றால் ஆங்கிலத்தில் எழுத்துக் கூட்டுதலே கடினமாயிருக்கின்றது. தமிழ் படிக்கத்தொடங்கி யெழுத்துக்களை யறிந்தபையனுக்கு 'பால்' என்பதை யெழுத்துக்கூட்டச் சொல்லிக்கொடுத்தால், அப்பால் அதுபோன்ற கால், நூல் முதலியவற்றையும் 'மரம்' என்பதைச் சொல்லிக்கொடுத்தபிறகு அதுபோன்ற அரம், வரம் முதலியவற்றையும் இலகுவாக அறிந்துகொள்வான் ஆங்கிலங் கற்கத்தொடங்கி எழுத்துக்களை யறிந்தவனுக்கோ? ஒவ்வொரு சொல்லையும் எழுத்துக்கூட்டச் சொல்லிக்கொடுக்கவேண்டும். உதாரணம்:—

But, put, me, knee, Be, Bee, See, Sea, எனவும் There, Their, are, Fare, Fair, எனவும் Sees, These, Hot, Taught, Our, Hour, Tower, Talk, Rock, new, knew, Out, Doubt, எனவும் Father, Bhosphons, Laugh, Often, Offer, எனவும் பலவாறு வேறுபட்டு வரும். பத்துப்பதினைந்து வருடம் ஆங்கிலம் பயின்றவருங்கூடச் சிலவார்த்தை யெழுத்துக்கூட்டத் தெரியாமல் அகராதி பார்ப்பதை நான் பார்த்திருக்கிறேன். இன்னும் இலக்கணத்தில் ஒருமை பன்மை முதலிய சில விஷயம் தமிழில் இலகு. உ-ம். மனிதன் மனிதர்; போனான் போனார் எனவரும். ஆங்கிலத்திலோ, man, men, Boy, Boys, City, Cities, Box, Boxes, Leaf, Leaves, Foot, Feet, Mouse, Mice, Child, Children, எனப் பலவாறு வேறுபடும். இவ்வாறு வேறுபடுவன வெல்லாவற்றையும் ஆங்கிலம் பயில்பவர் ஆரம்பத்திலேயே உருப்போட்டு

வர்ப்பண்ணிப் பழக்கிவிடுகிறதினாலே அவை அவர்களுக்கு இலகு
வாகத் தோன்றுகின்றன. தமிழை அவ்வளவு சிரத்தையோடு படி
த்துப் பழகுவதில்லையாதலால் இது அவர்களுக்குக் கடினமாகத்
தோன்றுகின்றது. மதுரைத் தமிழ்ச் சங்கத்துப் பிரசாரமாகும்
செந்தமிழ்ப் பத்திரிகையின் நடை கடினமா யிருக்கின்ற தென்
றும், அதனை யெல்லார்க்கும் விளங்கும்படியான எளிய நடையிற்
பிரசுரிக்கவேண்டுமென்றும், ஒருசாரார் கூறுகின்றனர். எல்லா
ர்க்கும் விளங்குவதென்றால் அது அசாத்தியமான விஷயம். நாலி
ரண்டு வருஷம் தமிழ் படித்தவர்கள் வர்த்தமானப் பத்திரிகை
படித்தறிவதே கடினமாகும்; அவர்கள் செந்தமிழ் எப்படிப் படிக்க
முடியும்? ஆங்கிலத்தை நாலிரண்டுவருஷம் தமிழ் படித்தவர்களு
க்கு இங்கிலீஷ் பத்திரிகைகள் படிக்க வியலாமற்போனால் அது
கண்டு" ஆங்கிலப் பத்திரிகைகளெல்லாம் கடினமானவை" யென்று
குறைகூறலாமா? தமிழில இலக்கணப் பயிற்சியின்றி யிலக்கியமட்டு
மேனும் நன்கு பயின்றவர்கள் செந்தமிழ்ப் பத்திரிகையைக் குறை
கூறார். இது நிற்க.

இனி, கிராமாந்தரங்களிலுள்ள தமிழ்ப் பள்ளிக்கூட நிலைமை
யைப் பார்த்தால் அது மிகவும் பரிதாபகரமாயிருக்கின்றது. முற்
காலத்தில் தமிழ்ப்பள்ளிக்கூடத்து உபாத்தியாயர்கள்குலம், அருள்,
தெய்வக்கொள்கை, மேன்மை, கலைபயில்தெளிவு, கட்டுரைவன்மை
முதலிய இலக்கணங்களை யுடையரா யிருந்ததனாலே அரிச்சுவடி
முதல் ஒவ்வொன்றுக்கும் காப்புக்கூறி அவற்றை முறையாகப்பயில்
வித்தனர். இடையே முன்சொன்ன காரணங்களால் பயிற்சிகுறைந்
ததனாலே ஊருக்கும் அத்தகைய ஆசிரியர் கிடைப்பது அரிதாயி
ற்று. ஆயினும் உலக வியவகாரத்திற்குத் தமிழ்க்கணக்கு வழக்குச்
சிறிதேனும் வேண்டியிருந்ததனாலே, அங்கங்குள்ளவர்களிற் சிறிது
நன்கு படித்தவர்களைக்கொண்டு கிராமத்தார்கள் தங்கள் பிள்ளை
களைப் படிப்பிப்பாராயினர். இம்முறையில் நாளுக்குநாட் கல்வி
குறையவே, எண்சுவடியும் நாலெழுத்துப்பேரும் படிக்கத்தெரிந்த
வர்கள்கூட உபாத்தியாயராய்விட்டார்கள். இவர்கள் தங்களுக்குத்
தெரிந்ததை ஓலைச்சுவடியி லெழுதிச்சொல்லிக் கொடுக்கவே பாடங்
களும் உச்சரிப்பும் பிழைபட்டன. இலக்கம், எண்சுவடி முதலிய

வற்றின் காப்பு வெண்பாக்களைக் கிராமாந்தரப்பள்ளிக்கூட உபாத்தி யாயர்கள் சொல்லிக் கொடுப்பதைக் கேட்டால் அவை வெண்பா என்று அறியமுடியாதபடி பல வேறு பாடபேதங்களோடு கூடியிரு க்கும். 'கண்ணன்மருகன் கணபதியைக் கைதொழுதால், எண்ணி லக்க மெல்லாம் வரும்' என்னும் இலக்கத்துக் காப்பு—'கண்ணன் மூருகன் கணபதியைக் கைதொழுதால் எண்ணியலக்கம் எல்லாம் வருமே.' எனவும், 'நெடுமாற்றிருமருகா நித்தன் மதலாய், கொடு மாவினையறுக்குங் குன்றே தடமாறு, தெண்மூப் பதுவாயு மென் சித்தத் தேகிற்கப் பண்ணுந் தமனே பணிந்து' என்னும் எண்சுவடிக் காப்பு—'நெடுமால் திருமூருகா நித்தம்முதவாய், கொடுமா வினைய றுக்கும் கொண்டே தடமாறுமல் எண்ணெழுத்தும் மூப்பதுவாயும் எழுத்துமேற் சித்தத்தே நிற்கப்பண்ணுத்தமனே பணிகமோத்து' எனவும் பிறவாறும் வழங்குகின்றன. எண்சுவடிவாய் பாடுகளின் உச்சரிப்பும் பலவகையாக மாறுபட்டிருக்கின்றன. அவற்றில் இர ண்டொன்றை யெடுத்துக் காட்டுகின்றேன்:—ஒன்பதாம் வாயில் ஓரொன்பானென்பான், பதிற்றுக்கொன்பான் தொண்ணூறு, நூற் றுக்கொன்பான் தொள்ளாயிரம் என்பன, முறையே ஓரொம்பா ஓம் பா, பயித்திக்கும்பா தொண்ணூறு, நூத்திக்கும்பா துலாயிரம் எனவும், பத்தாம்வாயில் பதிற்றுப்பத்து நூறு என்பது, பயித்திப் பயித்தி நூறு எனவும், பத்துநூறாயிரப்பத்துப்பத்து ஒருகோடி என்பது பத்துநூறாயிரப்பத்துப் பத்தொருகோடி எனவும் வழங்குகின்றன. மேலும் அப்பள்ளிக்கூடங்கள் சிலவற்றில் எழுத்துக்கூட்டிப் படிக் கத்தெரியுமுன்னமே ஆத்திசூடி, கொன்றைவேந்தன், வேழமுகம், உலகநீதி, வாக்குண்டாம் முதலியவை வரிசையாக நடக்கின்றன. அவற்றைப் பிள்ளைகள் படிக்கும்பொழுது கவனித்தால், பாடம் ஒன்றும், ஏட்டில் எழுதியிருப்பது ஒன்றும், அவர்கள் படிப்பது ஒன்றுமாயிருக்கும். இப்படிப் படித்து விட்டால் பிள்ளைகளுக்குப் படிப்பு வந்துவிட்டதென்று எண்ணிப் பெற்றோர்கள் தங்கள் பிள்ளை களை வீட்டில் நிறுத்திக்கொள்ளுவார்கள். முன்னே கூறியவாறு பட்டினத்து ஆங்கில கலாசாலைகளின் தமிழ்க்கல்வி யொருவிதமாக வும் ஈண்டுக்கூறியவாறு கிராமாந்தரத் தமிழ்ப்பள்ளிக்கூடங்களின் கல்வி யொருவிதமாகவும் கற்பிக்கப்பட்டுத் தமிழபிவிருத்தி குறை

யிலே, மஹாமஹோபாத்தியாய ரவர்களைப்போன்ற பெரியோர்கள் அச்சியற்றிய நூல்களைப் படிப்பாரிலராயினர்.

இவ்வாறு நம் தாய்மொழியாகிய தமிழ்மொழி தன்னை பாதரிப்பாரின்றி வாடும்பொழுது தமிழ்நாடு செய்த தவப்பயனெனவும், பண்டைக்காலந் தண்டமிழ் வளர்த்த பாண்டியரனைவருள் ஒருருக் கொண்டாரெனவும் புலவர்கள் புகழும்படி யலங்கரித்த ஸ்ரீமான் பாண்டித்துரைத்தேவரவர்கள் 12-வருஷங்கட்கு முன்னர் மதுரைத் தமிழ்ச்சங்கத்தை ஸ்தாபித்தார்கள்.

அதனைச் சேர்ந்த சேதுபதி செந்தமிழ்க் கலாசாலையில் மாணவர்களுக்கு அன்னவஸ்திரம் கொடுத்துப் படிப்பித்தலினாலே சிலர் தமிழை முறையாகக் கற்பாராயினர். அங்கேபடித்து அத்தமிழ்ச் சங்கப் பரீக்ஷைகளிற் றேறியவர்கள் பலர் காலேஜுகளிலும், ஹைஸ்கூல்களிலும், இவ்விடங்களிற் புதிதாக ஏற்பட்டிருக்கின்ற தமிழ் வித்தியாசாலைகளிலும் தமிழாசிரியராயிருக்கின்றார்கள். அத்தமிழ்ச் சங்கம் ஏற்பட்டு ஆறேழுவருஷம் சென்றபிறகு மகிபாலன்பட்டி வித்வான் ஸ்ரீ மு. கதிரேசச் செட்டியாரவர்களது நன்முயற்சியினாலே இசசன்மார்க்க ஸபையானது நாட்டுக்கோட்டையார் நகர கிராமங்களுக்கெல்லாம் வழிகாட்டியாக ஏற்பட்டு, இறைவன் திருவருளாலும், சபைத்தலைவர், காரியதரிசிகள், அங்கத்தினர் முதலியவர்களின் விடாமுயற்சியினாலும் வளர்ந்து இப்பொழுது ஐந்தாம் வருட பூர்த்தியைப்பெறுகின்றது. இதன்பின்னர்ப் பலவிடங்களிலும் கலாசாலை, ஸபை, புத்தகசாலை முதலியன ஏற்பட்டுவருதல் எல்லாரும் அறிந்தவிஷயம். திருவாவடுதுறை யாதீனத்திலும் இடையே சிலகாலம் நின்றிருந்த தமிழ்ப்பயிருக்கி இப்பொழுது நடைபெறுகின்றது. இவற்றிற்கெல்லாம் மேலாக நம் தமிழ்மொழிக்குப் புதியதோர திருஷ்டம் இப்பொழுது வந்திருக்கின்றது. அஃதியாதெனில், நம் காருணிய அரசாங்கத்தாரும் தமிழை யாதரிக்கத் தொடங்கி யிரண்டு பரீக்ஷைகள் ஏற்படுத்தியிருக்கின்றார்கள். அப்பரீக்ஷைகளுக்கு அளவுள்ள ஆங்கிலமும் பாடமாகஏற்படுத்தப் பெற்றிருக்கின்றது. அவற்றிற் றேறுகிறவர்வர்களுக்குப் பட்டங்களும் தக்க வேதனமுங்கொடுக்கப்படும். மேலும் ஆங்கிலக்கலாசாலை

களிலும், காலேஜுகளிலும் அமர்ந்திருக்கும் தமிழ்ப் பண்டிதர்களுக்கு முன்போலன்றி இப்பொழுது வேதனத்தை யுயர்த்தி யிருப்பதுமன்றி இனி, ஆங்கிலத்திற் பட்டம்பெற்ற ஆசிரியர்களுக்குச் சமமாகத் தமிழ்ப் பண்டிதர்களின் வேதனத்தை யுயர்த்துவதற்கும் ஆலோசித்துக்கொண்டிருக்கிறார்கள். ஆகவே "தமிழ்ப்படித்தவர்க்கு வரும்படி கிடையாது" என்று இதுகாறும் வழங்கிவந்த அபக்கியாதி இனி நின்றுபோம். அன்றியும், நம் அரசாங்கத்தார் இலக்ஷக்கணக்கான ரூபாசெலவழித்துத் தமிழ்க்கோசஞ் தயாரிசெய்து அச்சிடுவிக்கின்றார்கள். இவர்களுடன் தமிழரனைவரும் ஒத்துழைப்பின் நம தமிழ் மொழி நாளுக்குநாள் விருத்தியாகி மகோன்னத தசையை யடையுமென்பதற்குச் சந்தேகமில்லை.

இனித்தமிழராகிய நாம் செய்யவேண்டியது யாதெனில், நம்முடைய வூர்களிலெல்லாம் வித்தியாசாலைகளேற்படுத்தி கூடியவரையிற் றேர்ந்த உபாத்தியாயர்களைக் கொண்டு நேடுங்கணக்கு, இலக்கம், எண்சுவடி முதலியவற்றையும், மற்றைப்பாடங்களையும் முறையாகப் படிப்பிக்கவேண்டும். இக்காலத்துப் பாடபுத்தகங்கள் பல விருப்பினும், ஆறுமுகநாவலரவர்கள் பாலபாடங்களே அவையெல்லாவற்றினும் சிறந்தவை. ஒன்றுமுதல் நாலுவரையிலுமுள்ள அப்பாலபாடங்கள் நான்கையும் கணக்குடன்சேர்த்து நான்குவருடத்திற் படிப்பிக்கலாம். இக்காலத்திற்கு ஆங்கிலம் அவசியம் வேண்டியிருத்தலால், நம் வித்தியாசாலைகளில் அதனையும் ஒருபாடமாக வைத்துத் தினம் ஒருமணிநேரம் கற்பிக்கவேண்டும். இம்முறையெல்லாவிடங்களிலும் அனுஷ்டானத்திற்குவரின் மேற்படிப்புப் பலப்படும். இதற்குத் தடை சிலவுள. அவையாவன;—சிலவூர்களில் கற்றறிந்த உபாத்தியாயர்களைத் தருவித்துவைத்தால் அங்கங்கே முன்னிருந்தஉபாத்தியாயர்கள்தங்கள் பிழைப்புப் போய்விடுமென்றெண்ணி "இலக்கணப்பள்ளிக்கூடப்படிப்பு நம வீட்டுப் பிள்ளைகளுக்கு வேண்டியதில்லை. பிரசங்கம் பண்ணிக்கொண்டு திரிபவர்களுக்கே அதுவேண்டும். அரிச்சுவடி முதலியனபடித்தற்கு இலக்கணப்பள்ளிக்கூடப் படிப்புத் தோதுப்படாது" என்று ஊரிலுள்ளவர்களுக்குப் போதிப்பார்கள்.

[இன்னும் வரும்]

அ. கோபாலையர்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்




மதுரையில், ஆனந்தவருஷம் நடைபெறும்

# ஆவணிமூல உற்சவ

## தமிழ் வேதபாராயணப் பத்திரிகை.

—(*)—

### நால்வர் தமிழ் வேத மகிமை.

### திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகள்.

புனலி லேடெதிர் செல்லெனச்செல்லுமேபுத்தனார்தலை நத்தெனத் தத்துமே
தனலி லேடிடப் பச்சென் றிருக்குமே கதவு மாமறைக் காட்டி லடைக்குமே
புனையி லாண்பனை பெண்பனை யாகுமேபழையவென்புபொற்பாவையதாகுமே
தினவ ராவிடந் தீரெனத் தீருமே சிறந்த சம்பந்தர்செந்தமிழ்ப் பாடலே.

### அப்பர் சுவாமிகள்.

தலைகொ ணஞ்சமு தாக விளையுமே தழலுநீறு தடாகம தாகுமே.
கொலைசெ யானை குனிந்து பணியுமே கூர ராவிடந் தீரெனத் தீருமே
கலைகொள் வேத வனப்பதி தன்னுளே கதவு மீண்டு கடுகத் திறக்குமே
அலைகொள் வாரியிற் கல்லுமி தக்குமே அப்பர் போற்று மருந்தமிழ்ப் பாடலே!

## சுந்தரமூர்த்தி சுவாமிகள்.

வெங்க ராவுண்ட பிள்ளையை நல்குமே வெள்ளை வாரண மீதி லிருத்துமே
மங்கை பாகரைத் தூது நடத்துமே மருவி யாறு வழிவிடச் செய்யுமே
செங்க லானது தங்கம தாக்குமே திகழு மாற்றிட்ட செம்பொ னளிக்குமே
துங்க வாம்பரி சேரற்கு நல்குமே துலங்கு நாவலூர்ச் சுந்தரர் பாடலே.

## மாணிக்கவாசக சுவாமிகள்.

பெருகும் வையை தனையழைப் பிக்குமே பிரான் பி ம்படி பெற்றிடச்செய்யுமே
நரியை வாம்பரி யாக நடத்துமே நாடி மூகை தனைப்பேச விக்குமே
பரிவிற் பிட்டுக்கு மண்சுமப் பிக்குமே பரம னேடெழு திக்கோவைப் பண்ணுமே
வருகும் புத்தரை வாதினில் வெல்லுமே வாதவூரர் வழங்கிய பாடலே.

சிவநேய மிக்க சேவார்களே!

பூர்வ புண்ணியத்தால் நாம் வசிக்கும் ஒப்பற்றபெருமைபெற்ற மதுரைமாநகரமாகிய திருவாலவாய் க்ஷேத்திரத்தில் முக்கியமாக நிகழும் சித்திரை, ஆவணி, உற்சவகாலங்களில் தமிழ் வேதமாகிய தேவார பாராயணஞ்செய்பவர்களைத் தருவித்து இராக்காலங்களில் சாக்ஷாத் ஸ்ரீ மீனாக்ஷி சுந்தரேசுவரர் திருவீதி உலாக்கொண்டருளும்பொழுது, ஷை தமிழ் வேதப்பாராயணஞ் செய்விக்க வேண்டுமென்று சில பெரியோர்கள் விரும்பியவண்ணம் நிகழும் ஆவணி உற்சவமுதல் நடத்த உத்தேசித்திருக்கிறோம்

ஆவணி உற்சவத்துக்கு ரூ 150-க்கு குறையாமல் செல்லக்கூடியதாயிருக்கிறது

தமிழின் பெருமையையும் தமிழ் வேதக்கேட்டு இறைவன் இஷ்டசித்திகளை அருள்கின்றாரென்பதையும், மேலேகண்ட அற்புத விளக்கச் செய்யுள்களாலும், நால்வர் சரித்திர ஆராய்ச்சியாலும், அறிந்திருப்பீர்கள். ஆகையால் உத்தம சிவபுண்ணியங்களுள் முதன்மையான இக்கைங்கர்யத்தை தங்கள் தங்களாலியன்ற பொருளுதவி செய்து ஆதரிப்பீர்களென்று நம்புகிறோம்.

இங்ஙனம் தங்களன்புள்ள

மு. ரா. கந்தசாமிக் கவிராயர், மதுரை.

அ. சண்முகம்பிள்ளை, சோழவந்தான்.

சு. சிதம்பர ஓதுவார், மதுரை.

அ. முத்துசாமி பிள்ளை, மதுரை.

சிவமயம்.

# சிவஞானசித்தியார் சுபக்கம்

## மூலமும் பொழிப்புரையும்.

சைவசித்தாந்த சாத்திரம் பதினுன்கனுள் ஒன்றும், சிவஞானபோதத்துக்கு வழி நூலாக ஸ்ரீ அருணந்திசிவாசாரியர் திருவாய் மலர்ந்தருளியதும் ஆகிய சிவஞானசித்தியார் சுபக்கத்துக்கு திருவாவடுதுறை ஆதீனத்துச் சைவப்பிரசாரகாகிய தூத்துக்குடி ஸ்ரீ பொ. முத்தையபிள்ளையவர்கள், ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகள் உரையைத் தழுவி விரித்து விளக்கி யெழுதிய உரைப்புத்தகம் ஒன்று, இப்பொழுது செவ்வையாக அச்சிடப்பெற்றுள்ளது. இவ்வுரை, முன்னையுரையாசிரியர் பலர் அரிதின் விளக்கிய கருத்துக்களையும், வேறுசில விசேடங்களையும் யாவரும் எளிதினுணர்ந்து கொள்ளுதற்கு மிகஉபயோகமாகும்.

ஒவ்வொரு செய்யுட்கும் தனித்தனி அவதாரிகையும், கொண்டுகூட்டும், பொழிப்புரையும், விசேடக்குறிப்பும் இதன்கண் உள்ளன. சைவசம்பந்தமான பல ஆசங்கைகளுக்கு இதன்கண், செவ்வையாகச் சமாதானங்கள் எழுதப்பட்டுள்ளன. விஷய அகராதி முதலியவை விளக்கமாக முன்னர்ச் சேர்க்கப் பெற்றிருக்கின்றன.

இப்புத்தகம் நயமான கிளேஸ் கடிதத்தில் டிம்மி எட்டுப் பக்கங்கொண்ட 45 பாரத்தில் அச்சிட்டு உயர்ந்த காலிகோபயிண்டு செய்யப் பெற்றிருக்கிறது. யாவரும் எளிதில் வாங்கிப்படித்தற் பொருட்டுப் புத்தகம் ஒன்றுக்கு ரூ. 1—8—0 ஆகவிலை யேற்படுத்தியிருக்கிறது. தபாற்கூலி வேறு. வேண்டுவோர் அடியிற்கண்டவர்களிடத்துப் பெற்றுக்கொள்ளலாம்.

1. பொ. முத்தையபிள்ளை,
திருவாவடுதுறை யாதீனச் சைவப்பிரசாரகர்,
பங்களாத்தெரு, மேலூர், தூத்துக்குடி.

2. மானேஜர், விவேகபாநு அச்சியந்திரசாலை, மதுரை

இங்ஙனம்

எஸ். குமாரஸ்வாமிப்பிள்ளை.

# சமாசாரக்கொத்து.

**ஐரோப்பிய பத்திரிகாபி விருத்தி**:—ஐரோப்பியர்களுக்குள் பத்திரிகை நடத்துவதே ஒரு பெரிய வர்த்தகமாய் விட்டது. மற்ற வியாபாரங்களுக்காக எப்படி லிமிடெட் கம்பெனிகள் ஏற்படுத்தப்பட்டு வியாபாரங்கள் நடக்கின்றனவோ, அப்படியே பத்திரிகைகளுக்கும் பெரியலிமிடெட் கம்பெனிகள் ஏற்பட்டிருக்கின்றன. இல்லஸ்டிரேட்டெட் லண்டன் நியூஸ் அன் ஸ்கெட்ச் கம்பெனி லிமிடெட் என்னும் பிரசித்திபெற்ற கம்பெனியார் சென்ற 1913-ம் ஆண்டில் மட்டும் 40000-பவுன், அதாவது ஆறுலக்ஷம் ரூபாய் [illegible] பத்திரிகையை நடத்தியதில் லாபம் அடைந்திருக்கிறார்கள். தமிழ்ப் பத்திரிகைகளைப் பற்றி நாம் சொல்லத்தேவையில்லை. பிழைத்திருப்பதே பெருத்தலாபமாக விருக்கிறது.

**நீருண்ணாத மிருகங்கள்**:—ஹவாயியன் தீவென ஒரு தீவு இருக்கின்றது. அதில் வசிக்கும் ஆடுமாடு குதிரை முதலியன எப்போதும் தண்ணீர்குடிப்பதில்லையாம். அங்கு மலைச்சார்புகளிலுள்ள ஒருவகைப்புல்லே அவற்றிற்குஆகாரமாம். அப்புல் அவற்றிற்கு நீரும் ஆகாரமுமாக உபயோகப்படுகின்றதாம்.

**பார்ப்போர் பிரமிக்கத்தக்க பெரும் புத்தகம்**:—சைனாவிலுள்ள வைத்ய சங்கத்தார் தற்போது ஒரு புத்தகம் தயார்செய்திருக்கின்றார்களாம். அதன் நீளம் 7-அடியும் அகலம் 3½அடியுமாக விருப்பதுடன் அப்புத்தகத்தின் நிறை 1203 ராத்தலென்றும் சொல்லப்படுகின்றது.

**வைரங்களைப் பரிக்ஷிக்க**:—வைரக்கல் நல்லகல்லா என்பதையறிய பின்வருமாறு செய்ய வேண்டும். வெள்ளைக் காகிதத்தில் மையினால் ஒரு பொட்டு வைத்து அந்தப் பொட்டின்மேல் வைரக்கல்லை வைத்து அந்தக் கல்வழியாகப் பார்க்கையில் ஒரே ஒரு பொட்டுத் தெரிந்தால் சுத்தமான வைரமென்று தெரிந்து கொள்ளலாம். சுத்தமற்ற வைரமானால் அநேக பொட்டுகள் தெரியும். அல்லது அந்தப் பொட்டுப் பரந்து தெரியும்.

ஏர்ல் ஆப் காவிடனுக்குச் சொந்தமான ஹால்பீன் என்பவரால் செய்யப்பட்ட தாம்ஸ் காரம்வெலின் உருவப் படத்தை லண்டன் வியாபாரி யொருவர் 30000 பவுண்டு கொடுத்து வாங்கியிருக்கிறார்.

**சிசு மரணங் குறைந்த ஊர்**:—நியூஜிலாண்டு தேசத்திலுள்ள டண்டி என்னும் ஊரில் 60000 பேர் வசிக்கின்றனர். அங்கு 6 வருஷங்கட்கு முன் 100-க்கு 8 சிசுக்கள் மரண மடைந்து வந்தன. இப்போது 100-க்கு4-மரண மடைகின்றன. இதற்குக் காரணம் சிசுக்களை வளர்க்கத் தாயார்களைப்பழக்கும் பாடசாலைகள் பல அங்கு ஏற்பட்டிருக்கின்றமையே யாம்.

**உடைகட்காகப் பெருந்தொகை செலவழிப்போர்**:—அமெரிக்கா சிக்காகோவில் வசிக்கும் அநேக சீமாட்டிகள் தம்முடைகளுக்கு மாத்திரம் தனித்தனி வருஷத்தில் 15000 பவுண்கள் செலவழிக்கின்றனராம்.

பத்திராதிபர்.

தவிர, சிவப்பாயும் தடிப்பாயுமிருக்கும் சதைகளைத்தவிர, வேறுபலதிட்பமான மெல்லியகுழாய்களும் நமதுசரீரத்தில் அமைந்திருக்கின்றன. சுத்தமான இரத்தத்தை இருதயத்திலிருந்து சரீரம்முழுவதும் கொண்டுபோவதற்கும், சரீரம் முழுவதும் பரவிக்கொண்டிருக்கிற அசுத்தமானஇரத்தத்தை இருதயத்திற்குக் கொண்டு வந்து சேர்ப்பதற்கும் இந்தமெல்லிய குழாய்கள் பயன்படுகின்றன. இருதயம் என்பது மார்பின் நடுவில் தாமரை மொட்டைப்போல்மேற்புறம் விரிந்தும், கீழ்ப்புறம் குவிந்தும் தொங்கிக்கொண்டிருக்கும் ஒரு அருமையான அவயவமாகும். இந்த இருதயம் தேகத்திலுள்ள மற்றவுறுப்புகளைக் காட்டிலும்,— மூளை ஒன்றைத் தவிர,— மிகுதிட்பமுடையதாகையால், நன்றாய்ப் பாதுகாக்கப்படும்பொருட்டு ஒரு மெலலிய சவ்வுப்பைக்குள் இது வைக்கப்பட்டிருக்கிறது. இந்த இருதயத்தின் மேற்புறமிரண்டும் கீழ்புறமிரண்டுமாக நான்கு அறைகள் இருக்கின்றன. இவ்வறைகள் தாமே மூடிக்கொள்ளுவதும் திறந்துகொள்ளுவதுமாக எப்போதுமிருந்து கொண்டிருக்கும். இருதயத்தின் இடப்புறத்தில் சுத்தமான சிவந்தஇரத்தமும், வலப்புறத்தில் அசுத்தமான கரிய இரத்தமுமிருக்கும் இருதயத்தின் இடப்பக்கத்திலிருந்து ஒரு பெரிய நாடி உற்பத்தியாகி மேல்நோக்கிச்சென்று பிறகு இடதுபுறமாகவே வளைந்து முள்ளந்தண்டு ஓரமாய்ப்போய் அங்கிருந்து இரண்டாய்ப்பிரிந்து இரண்டுகால்களுக்கும் போகிறது. இருதயத்திலிருந்து சரீரம் முழுவதும் பரவுகின்ற சுத்தமான இரத்தம் இந்நாடி வழியாகப் போய்த்தான் பிறகு மற்றநாடிகளில் பாய்ந்து செல்லும். இருதயத்திலிருந்து ஒரு முறை வெளியேசென்ற சுத்த இரத்தம் மறுபடியும் இருதயத்திற்குள்வந்துசேர்ந்துவிடாமல் தடுப்பதற்காகசசிறுகபாடங்கள் இருதயத்தில் அமைக்கப்பட்டிருக்கின்றன. இந்தக்கபாடங்கள் இருதயத்திலிருந்துஇரத்தம்வெளியே செல்லுகிறபோது தாமே திறந்துக்கொள்ளும், பிறகு தாமேமூடிக்கொள்ளும். இருதயத்தின் வலபுறத்தின் ஒரு பெரிய நாடி உற்பத்தியாகி நுரையீரலுக்குப் போகிறது. நுரையீரல் என்பது மார்பிற்குக்கீழே வயிற்றின் வலதுபுறமாகஇருக்கும் ஒரு உறுப்பாகும். இது இருதயத்தைக் கௌவிக் கொண்டிருக்கும். நுரையீரலின் வெளிப்புறம் உப்பலாயும், உட்புறம் குடைவாயுமிருக்கும். நுரையீரலில் சுமார் 50 லட்சம் காற்றுக்குழாய்கள் இருக்கின்றன. இந்த அவயவத்தின் வலப்புறம்மூன்று பகுப்பாயும், இடப்புறம் இரண்டுபகுப்பாயுமிருக்கும். நுரையீரலானது கரிய சிவப்புநிறமுள்ளதாயும், மற்ற உறுப்புகளைவிட அதிகநிறையுள்ளதாயுமிருக்கிறது. சுவாசக்குழாய்களும் இரத்தநாடிகளும் இந்த நுரையீரலுக்குள் வந்து சம்பந்தப்பட்டிருக்கும். இரைப் பையில் விழும் ஆகாரத்தை ஜீரணமாக்கித் சுத்த இரத்தமாக அன்னஇரசத்தை மாற்றித் தேகத்தைப்போஷிப்பது இந்த நுரையீரலேயாகும். இருதயத்தின் வலப்புறத்திலிருந்து நுரையீரலுக்குப்போகும் நாடியானது தேகத்திலுள்ள அசுத்த இரத்தத்தை இருதயத்திற்குக் கொண்டுவந்துசேர்க்கும். இனி, நம்முடையவயிறு இரண்டுதுவாரங்களையுடைய

ஒரு பெரிய தோற்பையினைப்போலிருக்கிறது ஆகாரத்தைஉள்ளேவாங்கிக்கொள்ளுவதற்கு ஒரு துவாரம் உபயோகப்படுகிறது உட்கொள்ளப்பட்ட ஆகாரத்தில் சத்து நீங்கலாக மீதமான உபயோகமற்ற கழிவுப் பொருள்களை வெளியே கொண்டு போவதற்கு மற்றொரு துவாரம் உபயோகப்படுகிறது. இவைகளைத்தவிர சிறுகுடல் பெருங்குடல் முதலியவைகளும், வயிற்றில் அமைந்திருக்கின்றன. மூளை என்பது நினைப்பதற்கும் அறிவதற்கும் சாதகமாய் தலையில் அமைந்திருக்கும் ஒரு அற்புதக் கருவியாகும். பனைநுங்குபோல் வழுவழுப்பாயிருக்கும். சரீரத்திலுள்ள எல்லா உறுப்புகளுக்கும் இதற்கும் சம்பந்தமுண்டு இரத்தம் என்பது சிவந்தநிறமான ஒரு திராவகப்பதார்த்தம். இதுவே தேகத்திற்கு வளர்ச்சியையும் பலத்தையும் சரீர உறுப்புகளுக்குப புதியகிளர்ச்சியையும் கொடுக்கிறது. சுத்தமான இரத்தஓட்டமே தேகத்திற்கு மினுமினுப்பையும் அழகையும் கொடுப்பதாகும். சரீரம் அழிவுறாமல் நீடித்த நாள் நிலைநிற்பதற்கு இந்த இரத்தமே முக்கியமானது. தவிர சுத்தமான இரத்த ஓட்டம் சரீரத்திற்கு அழகைக்கொடுப்பது போலவே, அழகிய சரீரத்தைக் கண்டுவியக்கும்படியும், அழகிய பெண்களைக் கண்டபோது அவர்களையிச்சிக்கும் படியும் மனிதனைச்செயகிறது. அதிகம்சொல்லுவானேன்? சுத்தமான இரத்தஓட்டத்தினால் பெண்களுக்கு ஏற்படும் பேரழகும், சுத்தமான இரத்த ஓட்டத்தினால் ஆண்மக்களுக்கு உண்டாகும் ஆண்மைத்தன்மையும், காம இச்சையை உற்பத்திசெய்வதக்குக் காரணமாகின்றன என்று மீண்டும் நான் காந்திமதியைநோக்கிக்கூறினேன்.

"வைத்தியரே! சரீர அமைப்பைப்பற்றி நீர் கூறியவைகளை நான் அங்கீகரிக்கிறேன். ஆனால் சிற்சிலவிஷயங்கள் எனக்குப்பெரும் ஆசங்கைகளை விளைவிக்கின்றன. இரத்தஓட்டமும், சுகசரீரமும், வாலிபப்பருவமுமேகாமவிச்சையை உண்டாக்குகின்றனவென்றும், அந்த இச்சையே 'காதல்' எனப்பெயர்பெறும் என்றும் நாம்கொள்ளுவோமானால், அவையெல்லாம் நீங்கும்போது காதலும்நீங்கவேண்டுமே?' காதல் என்பது ஒருபுருஷன் ஒரேஸ்திரீயினிடத்தில் எக்காலமும் ஒரேதன்மையாகப் பாராட்டும் உண்மையானஉள்ளன்பாகும்' என்று நீர் முதலிற்கூறினீரே? அதற்கும் இதற்கும் மாறுபாடு காணப்படுகிறதே? ஆதலால் அழகு, யௌவனம். சுகமானசரீரம், ஆகிய இவை யெல்லாம், உண்டான காதலை மேலும் மேலும் பலப்படுத்துவதற்கு உபகாரணங்களாக இருக்கக்கூடுமே தவிர, இவையே நேரிற் காதலைஉண்டாக்காவென்பதும், காதலைக

சொடுப்பதும் காதலைப்பெறுவதுமானவஸ்து வேறொன்று இவற்றிலும்வேறாய் இருக்க வேண்டுமென்பதும் உமக்கு விளங்கவில்லையா ? '' என்று காந்திமதி கேட்டாள்.

'' கண்மணி ! நீ கேட்கும் கேள்வி எனக்கு விளங்கவில்லையே ? வேறொரு வஸ்து இருப்பதாகவும் எனக்குத் தெரியவில்லை''. என்று நான் பதில் அளித்தேன்.

'' வைத்தியரே ! சரீர அமைப்பைப்பற்றி மிகவிரிவாகக் கூறினீரே? அவ்வளவுசிறந்த சரீரம் எவ்விதம் உண்டாயிற்று ? நீர் சொன்ன எலும்புதோல் நரம்பாதிய சத்ததாதுக்களும் தாமே ஒன்றுசேர்ந்து சரீரமாயிற்று ? அல்லது அவைகளை எல்லாம்ஒன்றுச்சேர்த்து, கட்டிடவேலைக்காரன் கல் சுண்ணாம்புமுதலியவைகளைக்கொண்டு ஒரு மாளிகையைநிர்மாணம் செய்வதுபோல், ஒருவர் இச்சரீரதைதை உண்டாக்கினாரா ? '' என்று காந்திமதி என்னை நோக்கி வினவினள்.

'' சத்ததாதுக்களும் பிருதிவி, அப்பு, தேயு, வாயு, என்னும் நான்கு பூதங்களின் திரிபேயாதலாலும், ஆகவே இந்த நான்கு பூதங்களின் கூட்டுறவே இச்சரீரம் என்று சொல்லுவது இழுக்காகாதாதலாலும் சரீரம் தானேஉண்டானது தான். இச்சரீத்தை ஒருவர் சிருஷ்டித்தார் என்று நம்புவதற்கு இடமில்லை '' என்று நான் மறுமொழி பகர்ந்தேன்.

'' நண்பரே ! கல்லதிருக்கட்டும்; சரீர உறுப்புகள் தாமேஇயங்குகின்றனவா ? அல்லது சரீரத்திற்குள்ளிருந்து கொண்டு ஒரு வஸ்து அவைகளை இயக்குகின்றனவா ? '' என்று காந்திமதி மீண்டும் வினவினள்.

'சரீர உறுப்புகள் தாமே இயங்குகின்றன. அவைகளை வேறொரு வஸ்து இயக்குகிறதென்பது பொருந்தாது என்று நான் பதில் கூறினேன்.

'' நண்பரே ! அறிவற்ற சடப்பொருளான நிலமும், நீரும், நெருப்பும் காற்றும் தாமாவே ஒன்றுசேர்ந்து எலும்பு, தோல், நரம்பாதிய ஏழு தாதுக்களாகத் திரிந்தன வென்றும், அவற்றின் சேர்க்கையே உடம்பு என்றும் தாம் கூறியதே யுக்திக்கும் அனுபவத்திற்கும் பொருந்தியதாக இல்லை. இந்த சத்ததாதுக்

களாற் சம்பந்த சரீரத்தின் உறுப்புகள்தாமே இயங்குகின்றனவென்று நீர் கூறுவது, அதைவிடப் பொருத்த மற்றதாக இருக்கின்றது. சடப்பொருள்களின் சேர்க்கையில் அறிவு நிகழுமா ? ஒருக்கால் நிகழுமென்றே வைத்துக் கொண்ட போதிலும், அறிவது அறிவுடையபொருளாயிருக்கவேண்டுமேதவிர அறிவற்ற சடப்பொருளாக இருக்க முடியாது" என்று காந்திமதி சொன்னான்.

"அப்படியானால் உன்னுடைய கொள்கை என்ன ?" என்று நான் இடைமறித்துக்கேட்டேன்.

"சரீரத்திற்குள்ளேயே சரீரத்திற்கு வேறாய், ஆன்மா என்று 'சொல்லப் படும் சேதன அறிவுப்பொருள் ஒன்று இருக்கிறது அது இச்சை ஞானம், கிரியை என்னும் மூன்று குணங்களையும் இயல்பாக வுடையது. சரீரத்திற்குள்ளிருக்கும் அந்த ஆன்மா ஒரு காரியத்தைச் செய்ய விரும்பினால் சரீர உறுப்புகள் அக்காரியத்தைச் செய்கின்றன. ஆன்மா அறிய விரும்பினால்மனம் அறிகிறது. இப்படியே ஒவ்வொரு நிகழ்ச்சியும் ஆன்மாவினாலே சரீரத்தில் நிகழ்கின்றது. சரீரமாகியபம்பரத்தை ஆன்மாவாகியஜாலவித்தைக்காரன் தன்னுடைய இச்சையாகிய கயிற்றினாற்கட்டி ஆட்டுகின்றான் என்பதேஆன்றோருடைய கொள்கையாகும். இது பற்றியே 'ஆசைக்கயிற்றிலாடும் பம்பரம்' என்று நமதுமுன்னோர்கள் கூறினார்கள். ஆதலால் நீர் சொன்னது பொருத்த மற்றதாய் எனக்குத் தோன்றுகிறது" என்று காந்திமதி உரைத்தான்.

"நீ எதை வேண்டுமானாலும் சொல்லு. கடவுள் ஒருவர் உண்டென்பதையும், ஆத்மா ஒன்று உண்டென்பதையும் இதுவரையில் நான் நம்பவில்லை; இனியும் நம்பேன்" என்று நான் கூறினேன்.

"வைத்தியரே ! இருக்கட்டும்; இவ்விஷயங்களைக்குறித்து மற்றொரு சமயம் உம்மிடம் விரிவாகப் பேசி, உம்மை நம்பும்படி செய்கிறேன்" என்று காந்திமதி சபதம் செய்தான்.

சிறிது நேரங்கழித்து நானும் காந்திமதியும் தோப்பிலிருந்து நீங்கி மாளிகைக்குள் சென்றோம்.

---